7th February 1959]

**Sri P. G. MANICKAM** : தலைவர் அவர்களே, இந்த இசைத் தட்டுகளை வானொலி நிலையத்திலிருந்தும், பஞ்சாயத்து போர்டுகளில் உள்ள ரேடியோ மூலமும் ஒலிபரப்ப தக்க நடவடிக்கை எடுக்கப்படுமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : இந்த இசைத்தட்டுகளை கிராம போன் மூலமாகத்தான் உபயோகிக்க முடியும். எங்கெங்கே கிராமபோன் இருக்கிறதோ அங்கங்கே அனுப்பப்படும்.

**Sri K. B. S. MANI** : இவற்றையெல்லாம் கிராமபோன் மூலமாகத் தான் வைக்க முடியும் என்று சொன்னால் அது முடியாத காரியம். ரேடியோ நிலையத்திலிருந்து காலையிலோ, மாலையிலோ ஒவ்வொரு ரெக் கார்டு வைக்க வேண்டுமென்று உத்தரவு போட்டால்தான் கிராமங்களில் உள்ள ரேடியோ செட்டிகளின் மூலம் அது ஒலி பரப்பப்படுவதை எல்லோ ராலும் கேட்க முடியும். ஆகவே தீண்டாமை ஒழிப்புக்காக தினமும் முதலாக அல்லது இறுதியாக வானொலி மூலாமக ஒலி பரப்ப ஏற்பாடு செய்வார்களா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : நாம் உத்தரவு பிறப்பிக்க முடியாது. ஆலோசனை தான் சொல்ல முடியும்.

**Srimathi KAMALAMBUJAMMAL** : தீண்டாமை ஒழிப்புக்கு மன மாறுதல் அவசியம். மனமாறுதல் செய்வதற்கு அரசாங்கம் என்ன மருந்து கொடுப்பது ?

**Sri A. GOVINDASAMY** : இந்தத் தீண்டாமை ஒழிப்பு பிரசாரம் நகரங்களில் உள்ள சேரிகளில்தான் அதிகம் தேவைப்படுகிறது. அப்படி யிருக்க நகரங்களை விட்டுவிட்டு கிராமங்களில் ஏன் அதிக நடவடிக்கை எடுக் கிறார்கள் என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri C. SUBRAMANIAM** : இந்த பிரசாரம் கிராமங்களில் அதிகம் தேவைபடுகிறது. நகரங்களில் அவ்வளவு இல்லை. அப்படி யிருந்தாலும் அது தானாகவே மறைந்துவிடும் நகரங்களில் சேரிகளில் மட்டும் அல்லாது எல்லாப்பகுதிகளிலும் பிரசாரம் செய்ய வேண்டும் என்பதுதான் நோக்கம்.

*Portrait of Tiruvalluvar in Government Buildings*

* 103 *Q*.—**Sri V. K. KOTHANDARAMAN** : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சர்க்கார் பொதுக் கட்டிடங்களில் தமிழ்ப் பெரியார் திருவள்ளுவர் அவர்களின் உருவப் படத்தை வைப்பதற்குச் சர்க்காருக்கு உத்தேசம் உண்டா ?

(ஆ) ஆம் என்றால், எப்போது ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

**Sri K. VINAYAKAM** : திருவள்ளுவர் திருவுருவத்தை இன்னும் அரசாங்கம் திட்டவட்டமாக சொல்லவில்லை. அவரின் ஜடையை நீட்டியும், விபூதியைப் பூசியும், பூணூலைக் குறுக்கே மாட்டியும் படத்தில் போட் டிருக்கிறார்கள். அரசாங்கம் ஒரு திட்டவட்டமான உருவத்தை பிரசுரிக்க முன்வருவார்களா என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri C. SUBRAMANIAM** : அரசாங்கத்தாரால் தயாரிக்கப் பட்ட திருவள்ளுவர் திருவுருவம் ஒன்றும் கிடையாது. மக்கள் அவரவர்களின் கருத்திற்கு தகுந்தாற்போல் உருவத்தை அமைத்துக் கொண்டிருக்கிறார் கள்.

[7th February 1959

SRI V. K. KOTHANDARAMAN : திருவள்ளுவர் தமிழ் நாட்டின் பண்பைப்பற்றியும் ஜாதி மத பாகுபாடு கூடாது என்று திருக்குறளில் கூறி பெருமையைத் தந்த அவரின் திருவுருவத்தை இவ்வாறு இருக்கும் என்று இன்னும் ஏன் தீர்மானிக்காமல் இருக்கிறார்கள்?

THE HON. SRI C. SUBRAMANIAM : திருவள்ளுவர் உருவம் எவ்வாறு இருக்கும் என்று சர்க்கார் தெரிவிக்கவில்லை. எப்படி இருக்கும் என்பது சர்ச்சையில் இருக்கிறது. ஆனால் பாட புத்தகத்திற்கு வேண்டி கற்பனையில் ஒரு உருவத்தை அமைத்திருக்கிறார்கள்.

*Technological Diploma Board Examination*

* 104 Q.—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(a) whether it is a fact that students who have appeared and passed Technological Diploma Board Examination in 1955–56 and 1957–58 have not received their certificates and diplomas till October 1958; and

(b) if so, the reason therefor?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) & (b) Candidates who applied with proper certificates after passing the examination and undergoing one year's practical training have been awarded their diplomas. The eligible candidates who have not got the diplomas so far have either not submitted their applications for diplomas or have sent their applications with defective certificates necessitating further correspondence with them.

SRI K. SATTANATHA KARAYALAR : 1955–56-ம் ஆண்டிலே பாஸ் செய்த மாணவர்களுக்கு இன்னும் டிப்ளோமா சர்டிபிகேட் கொடுக்கப்படவில்லை. சர்டிபிகேட் பாரம் இல்லாத காரணத்தால் காலா காலத்தில் அவைகள் கொடுக்கப்படவில்லையா ? இல்லையென்றால் வேறு எந்தக் காரணத்திற்காக இந்தக் காலதாமதம் என்று அறிய விரும்பு கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : சர்டிபிகேட் கொடுக்காதது, சர்டிபிகேட் பாரம் இல்லாத காரணத்தினால் அல்ல. இந்த பரீட்சையில் பாஸ் செய்த பிறகு ஒரு வருஷம் பிராக்டிகல் கோர்ஸ் எடுத்துக் கொள்ளவேண் டும். அதற்குப் பிறகுதான் சர்டிபிகேட் கொடுக்கும்படி ஒரு விண்ணப்பம் போடவேண்டும். சில பேர்கள் பிராக்டிகல், சிலபேர்கள் டிப்ளமோ கோர்ஸ், பிராக்டிகல் கோர்ஸ் ப்பாஸ் செய்தும் கூட சர்ட்டிபிக்கட் கேட்காமல் இருந்து விட்டார்கள், அவர்களுக்கு கொடுக்கப்பட வில்லை.

*Corruption*

* 105 Q.—SRI K. SATTANATHA KARAYALAR : (on behalf of Sri N. R. Thiagarajan) : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா ?

(அ) தற்போதைய சென்னை ராஜ்யம் அமைத்த பின் இன்றுவரை லஞ்ச ஊழல்களுக்காக ஜில்லாவாரியாக வேலையிலிருந்து நீக்கப்பட்டவர்கள் எத்தனை பேர் ? அவர்கள் பார்த்த வேலைகள் என்ன ?

(ஆ) சஸ்பெண்ட் செய்து வைக்கப்பட்டவர்கள் எத்தனை பேர் ?

(இ) அவர்கள் மீதுள்ள வழக்குகள் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) to (c) The time and labour involved in collecting and furnishing the statistical data will not be commensurate with the purpose served.